Registered No. M 2330 'SIDDHANTHAM'
Vol. 33—No. 11



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 33 | சார்வரி கார்த்திகை 1960 நவம்பர் | இதழ் 11

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

1961 ஆண்டு சமாஜ அங்கத்தினர்கள் தங்களுடைய சந்தாவை 31—12—1960-க்குள் தயவு செய்து அனுப்பிவிடுமாறு கேட்டுக் கொள்கிறேன். 1961 ஜனவரி மாதம் வி. பி. பி.யில் சித்தாந்தம் அனுப்புவதால் பல அங்கத்தினர்களுக்கு 67 புதுக்காசு அதிகமாகக் கட்டணத்துடன் கொடுக்கவேண்டி வருவதாலும், மற்றும் சிலருக்கு வருத்தம் ஏற்படுவதாலும், முன்னதாக அங்கத்தினர்கள் தங்கள் தங்கள் சந்தாவை அனுப்பி விடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

மணியார்டர் மூலமாகச் சந்தாவை அனுப்பும் அன்பர்கள் கூப்பனில் குறிக்கவேண்டிய முக்கிய விஷயங்கள் : 1. சந்தா எண். 2. சந்தாதாரர் பெயர். 3. தெளிவான தற்போதைய தபால் முகவரி. 4. பல சந்தாதாரர்கள் ஒருமணியார்டர் மூலம் மொத்தமாகப் பணம் அனுப்பினால் அவரவர்கள் சந்தா எண் பெயர் விலாசம் தனித்தனியே கூப்பனில் எழுதியனுப்பவும். பணம் அனுப்பவேண்டிய முகவரி : காரியதரிசி, சைவ சித்தாந்த மகா சமாஜம், 14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4.

மலாய் நாட்டில் உள்ள சமாஜ உறுப்பினர்கள் தங்களுடைய சந்தாக்களை திரு. கே. இராமநாதஞ் செட்டியார், பி.ஏ.,பி.எல்., அவர்களிடத்தேனும், திரு. சிவநேயன் அவர்களிடத்தேனும் செலுத்திவிடலாம்.

—செயலாளன்.

## சமாஜ அறிக்கை

30, 31-12-1960, 1-1-1961 தேதிகளில் இலங்கையிலுள்ள திருக்கேதீச்சரத்தில் நடத்தத் தீர்மானித்துள்ள சைவ சித்தாந்த மகா சமாஜ 55-ம் ஆண்டு நிறைவு விழாவில் கலந்துகொள்ள வேண்டுபவர்கள் தனித்தனியே Pass Port பெற்றுக்கொள்ள வேண்டுமென்று தெரிவித்துள்ளபடியால், அவ்விழா மகாநாட்டிற்குச் செல்ல விரும்பும் சென்னை அன்பர்கள், Govt. of India, Regional Office of Pass Port & Emigration, Mukkur Nallamuthu Chetty Street, Madras-1ல் உள்ள அலுவலகத்தில் ரூ. 5 (ஐந்து) கட்டணம் கட்டி ரசீது பெற்று Commissioner of Police அலுவலகத்தில் அந்த ரசீதைக் கொடுத்து மனுத்தாள் பெற்று அவரவர்கள் Photo (படம்) ஒன்று வைத்து மனுச் செய்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வெளியூர் அன்பர்கள் மணியார்டர் மூலம் ஷை அலுவலகத்திற்கு ரூபா ஐந்து அனுப்பி ரசீது பெற்றுத் தாம் உள்ள ஜில்லாக்களிலுள்ள கலெக்டர் ஆபீசில் மேற்கண்ட முறைப்படி மனுச் செய்து Pass Port பெற்றுக்கொள்ளவும். இலங்கை மன்னார் ரயிலடியிலிருந்து திருக்கேதீச்சரம் செல்ல மாநாடு நடத்தும் வரவேற்புக் குழு

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாரியைஉள் நாடு

மலர் 33 | சார்வரி கார்த்திகை 1960 நவம்பர் | இதழ் 11

## சிவஞான போதம்*

(முருகவேள்)

முன்னுரை : 'சிவஞான போதம்' நமது அருமைச் செந்தமிழ் மொழியிலுள்ள தலை சிறந்த நூல்கள் பலவற்றில் ஒன்று. இலக்கண நூல்களில் தொல்காப்பியமும், நீதி நூல்களில் திருக்குறளும், காப்பிய நூல்களிற் சிலப்பதிகாரமும், யோக அனுபவ நுட்பங்களை உணர்த்துதலில் திருமந்திரமும், வரலாற்று உண்மைகளை வளம்பெறப் பாடுதலிற் பெரிய புராணமும், கற்பனைத் திறன் செறிந்த கவிதை நலத்திற் கம்பராமாயணமும் பிறவும் தந்நிகராற்றுச் சிறந்து திகழ்தல்போல, நம் அருமைச் செந்தமிழ் மொழியின்கண் ஒப்புயர்வற்ற மெய்ப்பொருள் நூலாக வீறுற்று விளங்குவது சிவஞான போதம் ஆகும்.

திருக்குறள் : சிவஞான போதம் தமிழ்மொழிக்கண் இயற்றப் பெற்றிருப்பது குறித்துத் தமிழர் அனைவரும் ஒருசேரப் பெருமிதம்கொண்டு மகிழலாம். 'திருக்குறள்' எங்ஙனம் இந்நாளில் உலகப் பெருநூல்களுள் ஒன்றென அனைவராலும் உடன்பட்டுப் பாராட்டப்படுகின்றதோ, அங்ஙனமே உலகப் பெருநூல்களுள் ஒன்றாக வைத்து மதித்துப் போற்றத்தகுந்த சீர்த்தி மிகுந்தது சிவஞான போதம் எனலாம். உண்மையான் உரைக்கப்புகின், திருக்

*சமாஜச் சார்பில் நிகழ்ந்த "மெய்கண்டார் விழா"வில், திருமயிலைக் கபாலீச்சரத்தின்கண் திரு T. H. விவேகானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., அவர்கள் தலைமையில், நிகழ்த்திய சொற்பொழிவினைத் தழுவியது (29-10-60).

குறளோடு ஒத்த சிறப்புடையது என்று கூறுதலினும், திருக்குறளினும் உயர்ந்த சிறப்புடையது சிவஞானபோதம் எனக் கிளந்து கூறுதலும் பெரிதும் பொருத்தமாகும்.

சுருக்கம்: தெய்வப் புலவர் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள், 'குறள்' என்னும் தன் பெயருக்கேற்ப மிகச் சுருங்கிய நூல் எனப் போற்றப்படுவது அனைவரும் அறிந்த தொன்று. அத் திருக்குறளினும் மிகமிகச் சுருங்கிய தொன்றாகச் சிவஞான போதம் அமைந்திருப்பது 'நினைத் தொறும் நினைத்தொறும் வியப்பிறந் தன்றே' எனத்தக்க நிலையில் உள்ளது. 40 வரிகளில் 216 சொற்களில் 624 எழுத்துக்களில் சிவஞான போதம் அடங்கி விட்டிருக் கின்றது. ஆதலின், உலகிலேயே மிகமிகச் சுருங்கிய - ஆனால் மிகமிகச் சிறந்து விரிந்த - நூல் சிவஞான போதம் ஒன்றே என நாம் துணிந்து சொல்லலாம்.

விட்டுப்பால்: இம்மட்டோ! ஆசிரியர் திருவள்ளுவர் தமது திருக்குறள் நூலின்கண், அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றனை மட்டும் கிளந்தெடுத்துக் கூறி, அவ்வாற்றால் வீடுபேற்றியல்பினைக் குறிப்பிற் பெறப்பட வைத்தனரேயன்றி, அவ்வீடுபேற் றியல்பினைத் தனியே கிளந்தெடுத்துக்கொண்டு துணிந்துகூற ஒருப்பட்டிலர். கல்லாடர் கூறுமாறுபோல, ஆசிரியர் திருவள்ளுவர் "உலகியல் கூறிப் பொருள் இது" என்று உணர்த்தியதே யன்றிச் சமயக் கணக்கர் மதிவழி நுழைந்து, அவர்கள் பலரும் கூறும் "மெய்த்திறம் - வழக்கு - நன்பொருள் - வீடு" எனும் பலதிறக் கோட்பாடுகளையும் இனையவென ஆராய்ந்தறிந்து சிக்கறுத்துத் தெளிவித்துப் பொருண் முடிபு காட்ட முற்பட்டிலர்.

"ஒன்றே பொருள்எனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார்"

ஆதலின், 'இச்சுழலிற் புக்கு நாம் சிக்கிக் கொள்ளுவது எற்றுக்கு?' என ஆசிரியர் திருவள்ளுவர் கருதினர் போலும்!

"உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்தல் அறிந்தென் புலந்து?"

என வினவிய தலைவியைப் போல,

"உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோற்
சிக்குதல்என் இச்சுழலிற் சேர்ந்து"

என அப்பெருமானாரின் திருவுள்ளம் கருதியதோ என்னவோ யாம் அறியோம்! அஃதெங்ஙனமாயினும்,

"ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்கள் ஒன்றாக
நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவால்—இன்றுரைக்க
என்னால் இயன்றிடுமோ? என்போல்வார் ஏதேனும்
சொன்னால்தான் ஏறுமோ சொல்?"

எனவரும் திருக்களிற்றுப்படியார் செய்யுளை நினைப்பிக்கும் வகையிலேயே திருவள்ளுவர் வீட்டுப்பாலை விளக்காது விட்டுச் சென்றுள்ளார். அவர்தம் திருவாய் மலரினின்று வீட்டுப்பால் விளக்கப்பெறா தொழிந்தமை தமிழராகிய நம்மனோர் தவக்குறைவேயாகும்! இங்ஙனம் ஆசிரியர் திருவள்ளுவர் தாமே கூறாது விடுத்துச் சென்ற அரும் பெரும் பொருளை, அவர்தம் அடிச்சுவட்டையே பின்பற்றி விளக்கிக்கூற எழுந்தது சிவஞான போதம் எனின், அதன் அருமை பெருமைகளை அளவிட்டுரைத்தல் இயலுமோ?

அறிவு நூல் முடிவுகளின் செறிவு: சிவஞானபோதம் 'சைவாகமங்களின் பொருள் நிச்சயம் உணர்த்துவது எனக் காரணக் குறியாயிற்று' என்பர் சிவஞான சுவாமிகள். "நின்ற சிவம் ஒன்று; அதனைத் தேர்தல் ஞானம்; நிகழ்போதம் தேர்ந்ததனைத் தெளிதல் ஆம்" என்பர் கடவுண்மா முனிவர். இச் சிவஞான போதம் செந்தமிழ் நூல்களுளெல்லாம் "சென்னியிற் கொண்டு" போற்றுதற்குரியது. இத்தொடருக்குச் 'சிரத்தானமாகக் கொண்டு' எனச் சிவஞான சுவாமிகள் பொருள் அருளிச் செய்திருத்தலின், தமிழ் நூல்களுளெல்லாம் தலையாயது இந்நூல் என்பது பெறப்படும். இதனை "உயர் சிவஞான போதம்" எனச் சான்றோர்கள் பாராட்டியுள்ளனர். 'கவிராட்சசர்' (Intellectual giant) எனப்பெறும் சிறப்பெய்திய கச்சியப்ப முனிவர், உலகெங்கணுமுள்ள அறிவ நூல்கள் அனைத்தின் முடிவுகளையும் இந்நூல் தன்னுள்ளே அடக்கிக்கொண்டிருக்கின்றதென்னும் உண்மையினை,

"சிறிய ஆடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்கு
அறிவு நூல்களின் முடிபெலாம் அகத்தடக் கியதோர்

நேறியின் நீடிய நிகழ்சிவ ஞானபோ தந்தைக்
குறிய நீர்தமி ழால்உரை குரவனைப் பணிவாம் ''

என்னும் பாடலிற் குறிப்பிட்டிருத்தல் உணரற்பாலது. இலக்கண அறிவு - இலக்கியப் புலமை - தருக்கநெறிப் பயிற்சி - திருமுறைகளிற் செறிந்த உணர்வு - பல்வேறு சமய நூல்களின் ஆராய்ச்சி - இறையருள் நலம் முதலியன பலவும் சிவஞான போதச் செம்பொருட் டெளிவுக்கு இன்றியமையாதனவாக உள்ளன. 'பேணுபல் கலைகள் என்னும் பெருகு சோபானம் ஏறிய' பின்னரே சிவஞான போதச் செம்பொருட் சிகரக் காட்சி நம்மனோர்க்குக் கைகூடுவதாக உள்ளது. அதுபற்றியே, சிவஞான போதம் குறித்தோ, அதனை இயற்றியருளிய ஆசிரியர் மெய் கண்டார் பெருமானைக் குறித்தோ, பெரும்பாலான பொது மக்கள் அறிந்துகொள்ளாத அவலநிலை காணப்படுகின்றது. இங்ஙனம் அருமையுடைமையும்கூட, ஒருவகையிற் சிவ ஞான போத நூலின் பெருமையை யுணர்த்துவதேயாகும் எனலாம். எனினும், திருக்குறளைப் படியாதாரும்கூட, அதன் பெயர் கேட்ட துணையானே 'மிகச் சிறந்ததொரு பெருநூல்' என மதித்துப் போற்றும் அளவுக்கு அதனைக் குறித்துத் தெரிந்திருத்தல்போல, நம் அருமைச் சிவஞான போதம்பற்றியும் உலக மக்கள் அனைவரும் அறிந்து கொள்ளச் செய்யவேண்டுவது நம்மனோர் கடமை!

விரிப்பிற் பெருகும் தொகுப்பின் எஞ்சும்: சிவஞான போதம் பலதிறப் பொது மக்கள் குழுமியுள்ள ஒரு பெருந் திரளில் சுவை மிகவும் ஆரவாரமாகவும் (Mass appeal) பேசிவிளக்கிவிடக் கூடியதொரு பொருளன்று. "நூலாருள் நூல்வல்லார்" நுணுகி ஆராய்ந்து கற்றுணர்தற்குரிய நூல் அது! கேட்டல் - சிந்தித்தல் - தெளிதல் - ஒன்றல் என்னும் நால் வகை நெறிகளால் உணரற்பாலது சிவஞான போதம்! "ஒஃதுநுவால் இன்று இந்நூல் மும்மை மலர்க்கு" என ஆசிரியர் அருளிச் செய்திருத்தலும் காண்க. அதற்குச் சிவஞான சுவாமிகள் "இந்நூல் அநுபவமுடைய தேசிக னால் அன்றி விளங்காதென்பார் ஒண்குருவால் என்றார்" என வரைந்துள்ள விளக்கமும் அறிந்துகொளற்குரியது. எனவே, அதனை ஒரு சில மணித் துளிகளில் விளக்கப் புகுதல் "விரிப்பிற் பெருகும் தொகுப்பின் எஞ்சும்" என

வரும் புறநானூற்று வரியின் உண்மையினை மெய்ப்பிப்ப தாகவே முடியும்.* எனினும், வேறு பிறிதோராறு ஏதும் இன்மையின், அந்நூற் பொருள் குறித்து ஒரு சில முதன்மையான செய்திகளை மட்டுமாதல் ஈண்டுக் கண்டு அமைவோம் :

மங்கல வாழ்த்து : சிவஞான போதம் பலவகைகளில் தனிச் சிறப்பியல்புடைய நூல். சிறப்பாகக் குறிக்கலுறின், தமிழ் நூல்களுள் முதன் முதல் மங்கல வாழ்த்துக் கூறு வதாக அமைந்தது சிவஞான போதமேயாகும். நூலினுட் கூறப்பெறும் பொருட் பாகுபாடுகளைக் குறிப்பால் தன் னகத்தே அடக்கிநிற்றல் மங்கல வாழ்த்துக்கு இலக் கணம் என்பர். இனையதொரு மங்கல வாழ்த்துப் பாடல் சிவஞான போதத்திற் காணப்படுதல்போல, முன் னைய தமிழ் நூல்களில் எதன்கண்ணும் காணப்படவில்லை.

“ கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே ”

என்பது சிவஞானபோத மங்கல வாழ்த்துப் பாடல். இதன்கண் சிவஞானபோத நூலின்கண் விளக்கப்பெறும் பொருட் பாகுபாடுகள் அனைத்தும் குறிப்பாற் புலப் படுத்தப் பெற்றிருத்தல் காணலாம். சிவஞான போதம் சுருங்கிய நூலாதல் புலப்பட இச்செய்யுள் மிக்க் குறுகிய ‘வஞ்சித் துறை’யின் இயன்றுளது. இந்நூல் 12 சூத்திரங் களான் இயன்றுண்மை தோன்ற, இப்பாடல் 12 சொற்

---

* “Anyone who has ever tried to present a rather abstract scientific subject in a popular manner knows the great difficulties of such an attempt. Either he succeeds in being intelligible by concealing the core of the problem and by offering the reader only superficial aspects or vague allusions, thus deceiving the reader by arousing in him the deceptive illusion of comprehension; or else he gives an expert account of the problem, but in such a fashion that the untrained reader is unable to follow the exposition and becomes discouraged from reading any further.” —*Dr. Albert Einstein*

களால் அமைவதாயிற்று. இச்செய்யுளகத்துள்ள 'அருளிய' 'புனைவர்' என்னும் இரண்டு வினைச் சொற்களால், இந்நூல் 'போது' என்றும் 'உண்மை' என்றும் இரண்டு அதிகாரங் களை யுடையதாதல் சுட்டப்பட்டது. மும்மூன்று சொற் கள் ஒவ்வோர் அடியாக வைத்து நான்கடிகளான் இச்செய்யுள் யாக்கப்பட் டிருத்தலின், இந்நூலும் மும்மூன்று சூத்திரம் ஒவ்வோரியலாக நான்கு இயல்க ளாக வகுக்கப் பெற்றமை தெளியலாம். இச்செய்யுளில் 'மலையில்லார்' என்னும் தொடர் 'மலை+வில்லார்' எனக் கொள்ளப் படுவதேயன்றி 'மலைவு+இல்லார்' எனவும் பிரித்துணர நிற்கும் திறனுல், இந்நூலின் மூன்ரும் சூத்திரமும் நான்காம் சூத்திரமும் தம்முள் தொடர்புடை யனவாய் 'இதுவும் அது' என மாட்டெறிய நிற்கும்தன்மை புலனும். அன்றியும், இச் செய்யுளிற் 'கல்லால் நிழல்மலை' என இடமும், 'அருளிய' எனச் செய்கையும், 'இணைமலர்' எனத் திருவடியும், 'புனைவர்' எனப் பேறும் உணர்த்தப் பெற்றிருத்தலால், இந் நூலின் நான்கு இயல்களும் முறையே பிரமாணம் இலக்கணம் சாதனம் பயன் என்பன வற்றை உணர்த்துதல் கொள்ளப்படும். பாண்டிப் பெருமாள் விருத்தியுரையிற் காணப்பெருமல், ஆசிரியர் சிவஞான சுவாமிகளால் திறந்தெரிந்து விளக்கப்பெற்றுள்ள இன்னே ரனைய சிறந்த நுண்பொருட் குறிப்புக்களுக்கு இடனுக யாக்கப்பெற்ற இம் மங்கல வாழ்த்துப்பாடல் ஒன்றே, சிவஞானபோதத்தின் அருமை பெருமைகளை விளக்கப் போதியதாகும்.

அவையடக்கம் : இங்ஙனமே, சிவஞான போதத்தின் கட்போதரும் அவையடக்கச் செய்யுளும் தனிப்பெருஞ் சிறப்பில்பு வாய்ந்ததாகத் திகழ்கின்றது.

> " *தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்*
> *எம்மை யுடைமை எமைஇகழார்—தம்மை*
> *உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற்*
> *புணராமை கேளாம் புறன்* "

என வருவதுபோன்ற 'அவையடக்கச் செய்யுள்' ஒன்றனை வேறு பிற எந்தத் தமிழ் நூலினும் காண்டல் அரிது. இங் ஙனம் தனிப் புதியதொரு முறையில் அவையடக்கம் கூறிய

சிறப்பு ஆசிரியர் மெய்கண்டார்க்கே யுரியதாகும். இச் செய்யுளில் தம்மினும் மேம்பட்ட தக்காரைப் போற்றும் பணிவும், தகவிலார் தம்மையெல்லாம் புறக்கணிக்கும் பெருமிதமும் ஒருங்கே இயைந்து விளங்குகின்றன. ஈண்டுப் புறன் என்றது புறங்கூற்று மொழியையும், புறச் சமயம் பற்றி இகழ்ந்துரைக்கும் மொழியையும் இரட்டுற மொழிதலாற் குறித்து நின்றது. ஆசிரியர் மெய்கண்டார் தமது பணிவும் பெருமிதமுமாகிய இரண்டும் ஒருங்கே தோன்ற அவையடக்கம் கூறிய சிறப்பை யுணர்ந்தே, அவரைப் பின்னுள்ளோர் "தவர் அடி புனைந்த தலைமையோன்" எனப் புகழ்ந்துபோற்றி மகிழ்வாராயினர்போலும்! இத்தொடர்க்குத் 'தவத்தோருடைய அடியைப்புனைந்த அன்பிற் பெரியோன்' என்றும், 'தவத்தோராலே தன்னுடைய அடியைப் புனையப்பட்ட அறிவிற் பெரியோன்' என்றும் பொருள் கொண்டனர் இலக்கணக் கொத்துரைச் சுவாமிநாத தேசிகர்.

அநுமானமும் அதிகரணமும் : பொருள்களின் இயல்பினை அறிவு அநுபவம் என்னும் இரண்டன் துணைகொண்டு அறியலாம். "அநுபவம் என்னும் சொற்குப் பொருள் அழுந்தியறிதல்" என்பர் சிவஞான சுவாமிகள். அறிவு அநுபவம் என்னும் இரண்டினையும் முறையே ஆராய்ச்சி அநுபூதி எனவும் கூறுவர். ஆராய்ச்சி அநுபூதி என்னும் இருதிறனாலும் சிவஞானபோதப் பொருள் உணரற்பாலது. "நாடிக் கண்டு மயர்வற அளித்த சிவஞானபோதம்" என்புழி, "நாடி எனவே அநுமான அளவையான் என்பதூஉம், கண்டு எனவே அநுபூதியில் என்பதூஉம் தாமே போதரும்" என்பது சிவஞானசுவாமிகள் விளக்கம். அநுமானம் எனினும் ஆராய்ச்சி எனினும் ஒக்கும். ஆசிரியர் தாம் தமது அநுபூதி அல்லது உள்ளொளி (Intuition) வாயிலாகக் கண்டுணர்ந்து தெளிந்த மெய்ப்பொருள்களை நம்மனோர் பொருட்டு அநுமான அளவை ஆராய்ச்சி முறைகளின் வைத்துச் சிவஞானபோதத்தில் விளக்கியருள்கின்றார் ("What is discovered by intuition is demonstrated by logic"). தாம் கூற மேற்கொண்ட கருத்தினைப் பிரதிஞ்ஞை - ஹேது - திருஷ்டாந்தம் என்னும் தருக்க நெறிக்குரிய அநுமான முறைகளின்கண் வைத்து நம்மனோர்க்கு அறிவுறுத்தருளி யிருக்கும் திறம், மெய்கண்

டாரின் சிறப்பியல்புகளுள் ஒன்ருகும். இச் சிறப்பியல் பினையே, பின்வரும் பாடல் உணர்த்துகின்றது :

“ எந்தை சனற்குமாரன் எத்தித் தொழஇயல்பாய்
நந்தி யுரைத்தருளும் ஞானநூல்—சிந்தைசெய்து
தான்உரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணர
ஏதுதிருட் டாந்தத்தால் இன்று.”

அளவைகள் பல உளவாகவும் அவற்றுள் அநுமானம் ஒன் றனுக்கே சிவஞானபோதம் பெரிதும் முதன்மையளித் துள்ளது. இதனல் ஆசிரியர் மெய்கண்டார் எத்துணைச் சிறந்த அறிவுநெறியாளர் (Rationalist) என்பது தெளி யலாம். இம்மட்டோ !

‘‘ மனத்தின் எண்ணி மாசறத் தெரிந்துகொண்டு
இனத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும் ’’

எனத் தோல்காப்பியனர் பணித்ததற் கேற்ப, மெய்கண்டார் பெருமான் தாம் கூற முற்பட்ட சிவஞானபோதப் பொரு ளைப் பலவேறு பாகுபாடுகள் (அதிகரணங்கள்) அமைய வகுத்துக்கொண்டு விளக்கியுள்ள திறமும் பெரிதும் போற் றற் பாலதாகத் திகழ்கின்றது. ஒவ்வோர் அதிகரணமும் ஐந்து கூறுகள் கொண்டதாகும் :

“ தன்ஞற் கூறப்படும் பொருளும், அதன்கண் ஐயப்பாடும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும், அதனை மறுத்துக்கூறும் சித் தாந்தத் துணிபும், இயைபும் என்னும் இவற்றிற்கு நிலைக்களம் அதிகரணம் எனப்படும்.”

இவ்வைந்தினையும் வட நூலார் முறையே விஷயம் - சம்ஸ யம் - பூர்வபட்சம் - சித்தாந்தம் - சங்கதி என்னும் குறி யிட்டுச் சொற்களால் வழங்குவர். இவற்றுள் இறுதியிற் குறிப்பிடப்பெற்ற இயைபு என்பதும், நூலியைபு அதிகார இயைபு ஒத்தியைபு பாத இயைபு அதிகரண இயைபு என ஐவகைப்படும். இவ்வாற்ருனெல்லாம் எடுத்துக்கொண்ட மெய்ப்பொருளாராய்ச்சியைச் சிறிதும் நெறிபிறழாது விளக்கிச் செல்லும் தனிப்பெரு மாட்சிமை சான்றது சிவஞானபோதம் !

பன்னிரு சூத்திரங்கள் : இருட்கேட்டிற்கும் நிருவிகற் பம் சவிகற்பம் என்னும் இருவகைக் காட்சிக்கும் ஞாயிறு

இன்றியமையாச் சிறப்பிற்றுயவாறு போல, மலத்தீர்வுக்கும் ஆராய்ச்சி அநுபூதி என்னும் இருவகை யுணர்விற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றுயது சிவஞானபோதம். புற இருள் நீக்கிக் காட்டுதற்குப் பன்னிரு வகைப்பட்ட ஞாயிறுபோல, அக இருள் நீக்கி யுணர்த்துதற்குப் பன்னிரண்டு சூத்திரங்களைக் கொண்டு சுடர்விட்டொளிர்வது சிவஞானபோதம். அப் பன்னிரண்டு சூத்திரங்களும் முறையே பின்வரும் பன்னிரண்டு பொருள்களை யுணர்த்துவன வாகும்.

| | | |
|---|---|---|
| 1. | பதியுண்மைக்குப் பிரமாணம் | பிரமாண இயல் |
| 2. | பாச முண்மைக்குப் பிரமாணம் | |
| 3. | பசுவுண்மைக்குப் பிரமாணம் | |
| 4. | பசு இலக்கணம் | இலக்கண இயல் |
| 5. | பாச இலக்கணம் | |
| 6. | பதி இலக்கணம் | |
| 7. | அதிகாரியின் இயல்பு | சாதன இயல் |
| 8. | ஞானத்தை யுணரும்முறை | |
| 9. | சாதிக்கும் முறை | |
| 10. | பாச நீக்கம் | பயன் இயல் |
| 11. | சிவப் பேறு | |
| 12. | அணைந்தோர் தன்மை | |

சிவன் எனும் செஞ்சொற் பொருள் : "குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்பில வேண்டுப வேட்பச் சொலல்" முறையாதலின், இவ்விரிந்த - நுணுகிய - பொருள்களில் நுழையாது, சில பொதுவான இனிய எளிய செய்திகளைப் பற்றி மட்டும் சிவஞானபோதத்தில் இருந்து எடுத்துப்பேசியமைதல் ஈண்டைக்குப் பொருத்தமாகும். "சிவன் எனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி அம்மான்", "சிவன் எனும் ஓசை அல்லது அறையோ உலகில் திருநின்ற செம்மையுளதே ?" என நம் சமயாசிரியர்கள் திருமுறைகளில் சிவம் என்னும் சொல்லை விதந்தெடுத்துப் புகழ்ந்து வியந்து மகிழ்ந்தனரேயன்றி, அதன் பொருளைத் தெற்றெனக் கிளந்துரைப்பக் கண்டிலேம். ஆயின், மற்று நம் மெய்கண்டதேவரோ, நம் சமய ஆசிரியர்களின் திருவுள்ளக் குறிப்பறிந்து, 'சிவன்' என்னும் சொல் பேரின்ப

காரணன் - முற்றுணர்வினன் - தூய தன்மையன் எனப் பொருள் படும் என்பதனை,

“ மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்த(து)
என்னும் மறையின் இயல்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணு உளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்காண்
எண்ணுன் சிவன்அசத்தை இன்று ”

எனவரும் சிவஞானபோத வெண்பாவால் விளக்கியருள் கின்றார். முதல்வனால் அன்றி உயிர்கள் தாமே உணர மாட்டா - உயிர்கள் சிவ சந்நிதியிலேயே சேட்டித்து நிற்கும் என்பதனை விளக்கும் இவ்வெண்பாவில், “ மன்னு சிவன் என்புழிப் பேரின்பத்துக்குக் காரணன் என்னும் பொருட்டாய்த் தனது சந்நிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற் குரிய இயைபுணர நின்றது ; சொன்ன சிவன் என்புழி முற்றுணர்வினன் என்னும் பொருட்டாய்க் காட்டாதற்குரிய இயைபுணர நின்றது ; எண்ணுன் சிவன் என்புழித் தூய தன்மையன் என்னும் பொருட்டாய் அசத்தை எண்ணுமைக் குரிய இயைபுணர நின்றது சிவன் எனுஞ் செஞ்சொல் !”

இனி, ஈண்டு வேறோர் உண்மையும் இனிதுணரக் கிடக்கின்றது. இவ் வெண்பாவின் சொற் பொருள்களையே முற்றிலும் அடியொற்றித் தழீஇ,

“ இறைவன்றன் சந்நிதிக்கண் உலகின்றன் சேட்டை என்னும்
மறைகளும் மறந்தாய்! மாயை மருவிடான் சிவன்!அ வன்கண்
உறைதரா(து) அசேதனத்தால்! உருவுடை உயிர்கட் கெல்லாம்
நிறைபரன் சந்நிதிக்கண் நீடுணர் வுதிக்கும் அன்றே!”

எனவரும் சிவஞானசித்தியார் செய்யுள் இயன்றுள்ளமை யின், ஒரு சிலர் கருதுவதுபோல, ஆசிரியர் மெய்கண்டார் பன்னிரு சூத்திரங்களை மட்டுமேயன்றிச் சிவஞானபோத வெண்பாக்கள் முதலியனவற்றையும்கூட அருளிச்செய் தமை தெளியப்படும்.

அத்துவித விளக்கம் : ஆசிரியர் மெய்கண்டார் அத்து விதத்தின் அரிய உண்மைப் பொருளை விளக்கிய சிறப்புக் குரியவர். இச்சிறப்பினைத் தாயுமான அடிகள்,

“ பொய்கண்டார் காணுப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன்அருள் மேவுநாள் எந்நாளோ ?”

என விதந்தோதிப் போற்றுவர். இறைவனுக்கும் உயிர்களுக்கும் இடையேயுள்ள தொடர்பினை இருளும் ஒளியும் போற் பேதம் என்பர் துவைதிகள்; பொன்னும் பணியும் போல் அபேதம் என்பர் ஏகான்ம வாதிகள்; சொல்லும் பொருளும் போற் பேதாபேதம் என்பர் விசிட்டாத்துவைதிகள். இங்ஙனம் இறைவனுக்கும் உயிர்களுக்கும் இடையேயுள்ள தொடர்பு குறித்து ஒரோவொரு திறமே பற்றிச் சமயவாதிகள் தம்முட் கலாம் விளைத்துக்கொள்வர். ஆனால் இறைவனே கலப்பினால் உடலின் உயிர்போல் அவ்வுயிர்களேயாயும், பொருட்டன்மையாற் கண்ணின் அருக்கன் போல் அவற்றின் வேறுமாயும், உயிர்க்குயிராதற் றன்மையாற் கண்ணொளியின் ஆன்மபோதம் போல உடனுமாயும் உயிர்களோடு இயைந்து நிற்பன் என்பர் மெய்கண்டார். இங்ஙனம் இறைவன் உயிர்களோடு ஒன்றாயும் - வேறாயும் - உடனாயும் இயைந்து நிற்கும் நிலைமையே அத்துவிதம் என்னும் சொல்லாற் குறிக்கப் பெறும்.

> "அதுஇது என்ற(து) அதுஅல்லான்; கண்டார்க்(கு)
> அதுஇது என்றதையும் அல்லான்;—பொதுவசனில்
> அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே!
> அத்துவிதி அன்பில் தொழு."

மும்மலங்கள்: மும்மலங்களைக் குறிக்கும் ஆணவம் மாயை கன்மம் என்னும் சொற்களை நம்மிற் பெரும்பாலோர் கேட்டிருப்பர். புண்ணிய பாவங்களைப் பயக்கும் விருப்பு வெறுப்புக்களாய்ப் பொருந்துவது கன்மமலம். மண்முதல் மாயாதத்துவம் ஈறாகக் காணப்படுபவை மாயா மலம். சுட்டியறிவதாகிய விபரீதவுணர்வைப் பயப்பிப்பது ஆணவமலம். நெல்லிற்குமியும் கிகழ்செம்பினிற் களிம்பும் போலத் தொன்றுதொட்டு உயிரின்கண் கலந்து நிற்பதொன்றாகலின், ஆணவமலத்தைச் சகசமலம் என்பர். மாயை கன்ம மலங்கள் இடையே வந்து சேர்வனவாகலின், அவற்றை ஆகந்துக மலம் என்பர். தோற்றமுறை பற்றி ஆணவம் மாயை கன்மம் என்பதே இயல்பாயினும், அவை நமக்குக் காட்சிப் புலனாகும் முறைகுறித்துச் சிறுபான்மை கன்மம் மாயை ஆணவம் என்றலும் உண்டு. இம் மூன்று மலங்களும் உண்மை ஞானத்தைத் தலைப்பட்டார் மாட்டும் யாதானும் ஒரு நெறியான் நுழைந்து

அம் மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய பண்டை விபரீத உணர்வைக் கிளர்ந்தெழச் செய்து, சிவ போகப் பெருவாழ்வை இழப்பிக்கச் செய்யும். மேன்மேல் முறுகுவனவாகிய இவற்றை, "இளைதாக முண்மரங் கொல்க" என்றபடி, இவை தோன்றும் பொழுதே களைந் தெறிந்து துடைத்தல் வேண்டும்.

"புண்ணிய பாவம் பொருந்தும்இக் காமியமும்
மண்முதல் மாயைகாண் மாயையும்—கண்ணிய
அஞ்ஞானம் காட்டும்இவ் ஆணவமும் இம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக்(கு) ஆகா, விடு !"

சிவனடியார் சேர்க்கை : அஞ்ஞானம்காட்டுதல் மாயை கன்மங்கட்கு ஆணவமலச் சார்பானுய செயற்கை; ஆணவ மலத்திற்கு அஃது இயற்கை. இம் மும்மலங்களும் அஞ் ஞானத்தை உணர்த்துதல் இலக்கு வாய்த்தழியேயாம். இலக்கு வாயாத வழியும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகை விரகுகளால் தம்மோடு ஒப்ப விபரீத உணர்விற் செலுத்தி நம்மைக் கெடுத்தே விடுவாராகலான், சிவபத்தியில் லார் சேர்க்கையை விடுத்துச் சிவபத்தர்பால் நாம் இடை யருது தொடர்புகொண்டு ஒழுகல் வேண்டும். ஒழுகின், நம்மைப் பிராரத்தவினை நலிய மாட்டா தொழியும்.

"மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்
சிறப்பிலார் தம்திறத்துச் சேர்வை—அறப்,பித்துப்
பத்தர் இனத்தாய்ப் பரன்உணர்வி னல்உணரும்
மெய்த்தவரை மேவா வினை."

குருலிங்க சங்கமம் : இங்ஙனம் சிவபத்தர்களோடு இணங்கி நிற்பதேயன்றிச் சிவபத்தர்களின் திருவேடத்தை யும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபடுத லும் வேண்டும். காமக் கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகர் உள்ளத்தைக் கவர்ந்து இன்பம் செய்யுமாறு போல, மெய்யுணர்வுடை யவர்களைச் சிவவேடமும் சிவாலயமும் காட்சிமாத்திரை யான் உள்ளங் கவர்ந்து இன்பஞ் செய்யும் இயல்பின வாகும். இறைவன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும், குரு - லிங்கம் - சங்கமம் என்னும் மூன்றிடத்தும் தயிரில் நெய்போல விளங்கி நிலைபெற்று, ஏனை இடங்களிலெல்

லாம் பாலின் நெய்போல வெளிப்படாது நிற்பன். இவ் விடங்களின் மட்டும் இறைவன் வெளிப்பட்டு நிற்கும் தன்மை, பசுவின் உடலெங்கணும் பால் பரவி நிற்பினும் அதன் மடியகத் திருந்து மட்டுமே வெளிப்படுவதை ஒக் கும். குரு லிங்க சங்கம வழிபாட்டால் நம் வினை தீரும்.

"வினையால் அசத்து விளைதலான், ஞானம்
வினைதீரின் அன்றி விளையா ;—வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும் !
ஆனத்தால் அன்பிற் றொழு"

ஞானசிரியன் செய்யும் நன்றி: வீடுபேறு விழையும் உயிர்க்கு உறுதி பயப்பது குருவழிபாடேயாகும். "அகத் துறு நோய்க்கு உள்ளினர் அன்றி அதனைச் சகத்தவரும் காண்பரோதான் !" என்றபடி, உயிர்க்குயிராய் நிற்கும் இறைவனே குருவாகப்போதருகின்றான். தன்னுண்மையை அறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பல்லாற்றா னும் அதனைத் தெரித்துணர்த்துகின்றான். எத்தனையும் எளிய உயிரை எத்தனையும் அரிய தன்னைப்போல் ஆகும்வண்ணம் பெரியதோர் உதவியைச் செய்தருள்கின்றான். அத்தகைய பேருதவி புரிந்தருளும் ஞானசிரியனை அதன் பின்னர் உயிர் மறத்தல் கூடாது. மறந்தால், "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்றதற்கேற்ப, உய்தியில்லதோர் பெருந்தீங்காய் முடியும். ஆதலின் ஞானசிரியனை இடைவிடாது நினைந்து தொழுவது வீடுபேறு விழையும் உயிர்கட்குச் சாலவும் உறுதி பயப்ப தாகும்.

"தன்னை அறிவித்துத் தான்தானச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது !—முன்னவனே
தானேதா னச்செய்தும் தைவமென்றும் தைவமே !
மானே தொழுகை வலி !"

தெய்வப் புலவர் திருவள்ளுவர் பெருமானை ஆசிரியர் மெய் கண்டார் எங்ஙனம் பெரிதும் மதித்துப் போற்றியுள்ள னர் என்பதனை அறிதற்கு இவ்வெண்பாவும் உறுபெறுஞ் சான்றாகும். மேலும், இவ்வெண்பாவால் மெய்கண்டார் போன்ற நமது சமய ஞானசிரியர்களை நாம் தக்கவாறு தொழுது போற்றி ஒழுகுவதே நம்மனோர் உயிர்க்கு

நலம் பயப்பது என்னும் உண்மையும் செவ்விதிற் தெளியப்படும். இனியாதல் நாம் ஆசிரியர் மெய்கண்டாரையும், அவர் இயற்றியருளியசிவஞானபோதநூலினையும் முறையே போற்றிப் பயின்று நலம்பெற முயலுவோமாக!

முடிவுரை: 'பேசுபவர்க்கும் புரியாமல் கேட்பவருக்கும் விளங்காமல் தெளிவில்லாதிருக்கும் செய்தியே தத்தவம்' ("Philosophy is synonymous with unintelligibility") என்பர் சிலர். அத்தகையதொரு கடினமான பொருள்பற்றி என்னைப் பேசப் பணித்து வாய்ப்பளித்த சமாஜத்தினர்க்கும், இதுகாறும் பொறுமையாக இருந்து கேட்ட உங்கள் அனைவருக்கும் என் நன்றியும் வணக்கமும் உரியவாகுக.

எல்லா நூல்கள் தம்முள்ளும் இனிதே சுருங்கித் திகழ்வதெனச்
சொல்லா நிற்பர் தீருக்குறளைச் சூழ்ந்து கருதின் அதனினுமே
பல்லாற் றானும் சிவஞான போதம் சுருங்கிப் பயன்பெருகும்!
நல்லோர் புகழ்அம் மெய்ந்நூலின் நலங்கள் பெரிதும் வரம்பிலவாம்!

நாற்ப தடியால், இருநூற்றுப் பதினு றெளிய நற்சொல்லால், [லாம்
எற்ற அறுநூற் றிருபான்நான்(கு) எழுத்தால், சமயக் கொள்கையெ
தேற்றித் தெருட்டும் சிவஞான போதச் செழுநூல் போல்எங்கும்
வேற்றோர் நூலின் றெனவுரைப்பின், மிக்க அதன்சீர் விளம்புவர்யார்?

இறையே உயிரே உலகென்றே இலங்கும் மூன்று பெரும்பொருளும்
முறையே தருக்க நெறிநின்று முன்னும் பின்னும் முரணுமே
நெறியே ஆய்ந்து தடைவிடையால் நிறுத்தும் மறுத்தும் மெய்ந்நிறீஇக்
கறையின் றுணர்த்தும் சிவஞானபோதம் கடல்போற்பெருஞ்சீர்த்தாம்!

ஒன்றாய் வேறாய் உடனாக உயிர்கள் தம்மோ டொருங்கியைந்து
நன்றே அருளால் அவற்றினுக்கு நயந்து கண்டும் காட்டியுமே
நின்றே உதவும் இறைவனருள் நிலையை, அத்து விதப்பொருளால்
வென்றே விளக்கும் சிவஞான போதம் அறிவுக் குயர்விருந்தாம்!

அறிவின் முடிந்த முடிபாக அருமை பெருமை பலநிறைந்து
செறியும் சைவ சித்தாந்தம் என்னும் சிறந்த கொள்கையினை,
நறிய அளவும் அறிவியலும் நல்லோர் அடைவும் நடைமுறையும்
நெறியின் அமையச் சிவஞான போதம் விளக்கும் நிலவியப்பாம்!

—முருகவேள்

——

# ஆன்ம லாபம்

(திரு. நல். முருகேச முதலியார், பி.ஏ.)

சித்தாந்த ஞானபாதச் சிறப்பதிகாரத்துட் கண்ட சாதனம், பயன் என்பவற்றுள் கூறப்பட்ட பத்து அவத ரங்களைத் தசகாரியம் என்பர். அவை தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்ம தரிசனம், ஆன்மசுத்தி, பரரூபம், பரதரிசனம், பரயோகம், பர போகம் எனச் சொல்லப்படும்.

தத்துவரூபமாவது நிலம் முதல் நாதம் ஈருன முப்பத்தாறு தத்துவங்களையும் ஆன்மா தனக்கு வேருகக் காணும் நிலை.

தத்துவ தரிசனமாவது அத்தத்துவங்களைச் சுத்தமாயா அசுத்தமாயா மலங்களின் காரியமென்று தன்னறிவிலே காணுவது. தத்துவ சுத்தியாவது தத்துவங்களின் விகற்ப மாகிய சுட்டறிவுகளில் நில்லாமல் அவைகளினின்றும் நீங்கி அன்னியனாய், எங்கும் நிறைவாய் நித்தியமாய் அறிவா யுள்ள முறையை அறிவது.

ஆன்மா தன்னுடைய அறிவினாலே ஒன்றை அறியுந் தன்மை தனக்கு இல்லையாயினும் தத்துவங்கள் வாயிலாகப் போகங்களை நுகரும்பொழுது தன்னறிவுகொண்டே அறிந்ததாக மயக்கமுறாமல் சிவனருளாலே அவ்வருளை உணர்ந்து தன் இயல்பை உணர்வது ஆன்ம தரிசனம். இவ் வாறு தத்துவங்கள் தானல்லவென்றும் தனதல்லவென்றும் இறைவன் அருளால் அறிந்த ஆன்மா தனக்கெனச் செய லொன்றுமின்றி அவ்வருள் வயப்பட்டு நிற்றல் ஞானத் தால் வரும் பயன். ஞானத்தால் எய்தும் பயனை முறையே ஆன்ம தெரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்ம லாபம் என மூன்ருக நூல்கள் கூறும். இம் மூன்றும் முறையே நிகழும் வகையினைப் பின்வரும் சிவப்பிரகாசச் செய்யுள் தெளிவுற விளக்குதல் காணலாம்.

"தேசுற மருவும் ஆன்ம தெரிசனம், ஆன்ம சுத்தி,
ஆசிலா ஆன்ம லாபம் ஆகமூன் ருகும்; மூன்றும்
பாசம தகல ஞானம் பற்றல், தான் பணியை நீத்தல்,
ஏசில்நே யத்த ழுந்தல் எனும்இவற் றடங்கு மன்றே."

இங்ஙனம் ஆன்மாவின் தற்போதம் சீவியாதிருக்க, ஆன்மா ஞானமேயாய்ச் சுத்தி அடையும். இதுவே

ஆன்மசுத்தி. இது கூடிய வழி ஞானத்துக்கு முதலாகிய ஞேயம் தோன்றும். எப்படி ஒளியானது அதன் முதல்வனாகிய ஆதித்தனையன்றி நில்லாதோ, அப்படி சிவத்தையன்றி அவனது அருளாகிய ஞானமும் நில்லாது. எனவே ஆன்மா ஞானத்தோடு கூடித் தானாய் நிற்பதுமில்லை, ஞானமும் ஞேயமாவதில்லை. ஆன்ம சுத்தியின் பயன் பாசநீக்கமும், வான்பயனாகிய வியாபக அறிவுமாகும். இச்சா ஞானக் கிரியைகள் தொழிற்பாடின்றி நிற்கவே ஆன்மா சிவத்தினோடு ஏகனாகி நிற்கும்.

தன்பணி நீத்துத் திருவருள் வியாபகத்துடன் ஆன்மா நிற்கும்போது முன் ஈட்டிய சரியை கிரியை யோகங்களின் முதிர்வினாலே இருவினை யொப்பும் சத்திநிபாதமும் மலபரிபாகமும் நிகழப்பெறும். இந்தப் பக்குவத்தில் இதுவரையும் உள்நின்று உணர்த்திய சிவன் குருவடிவங்கொண்டு தீக்ஷை செய்து பதிபசுபாச ஞானங்களை உணர்த்துவர். ஞானகுருவின் உபதேசத்தைக் கேட்டு, சிந்தித்துத் தெளிந்ததின் பயனாக நிட்டை கைவரப் பெறும். இதுவே ஆன்மலாபம். சிற்றறிவாகிய தானும் பேரறிவாகிய சிவமும் கண்ணொளியும் ஆதித்தனொளியும் போல அத்துவிதமாய்க் கலந்து நிற்கும். அந்நிலையில் தானொரு பொருள் உண்டென்று அறியாது சிவத்தோற்றம் ஒன்றையே ஆன்மா காணப் பெறும். ஆன்ம தரிசனமே சிவபோகமாகிய அத்துவித நிலைக்கு முதல்நிலையாகும். இதன் விளக்கங்களைச் சிவப் பிரகாசத்திலும் பண்டார சாத்திரங்களிலும் காண்க. திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் வரும் பட்டினத்துப் பிள்ளையாரின் திருவாக்கும் ஈண்டு சிந்திக்கற்பாலது :

"மங்கை பங்க! கங்கை நாயக!நின்
தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலங் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையுங் கண்டேன், காண்டலும்
என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன்
நின்னிலை அனைத்தையும் கண்டேன் ; என்னை ?
நின்னைக் காணா மாந்தர்
தன்னையுங் காணாத் தன்மை யோரே."

—பதினேன்றம் திருமுறை

---

# சைவநெறியியல்பு

## மாணிக்கவாசக அடிகள்

சைவம் சிவ சம்பந்தம். 'சைவம் சிவத்தொடு சம்பந்தம் ஆவது'. நெறி - வழி, மார்க்கம், சமயம். இயல்பு - தன்மை, சுவபாவம் (தன்னியல்பு). சைவ சமயத்தின் தன்மையே சைவநெறியியல்பு எனப்படும். இவ்வியல்பை நன்குணர்பவரே சைவத்திற் பற்றுடையவராய்ச் சிவ வழிபாட்டைத் தவருமற்செய்து பேரின்பம் பெற்றுய்வர்.

1. செய்வான் : நல்வினை தீவினைகளைச்செய்யும் உயிர் உண்டு. அதுவே தான் செய்யும் வினைக்கு முதல் ஆகும். 'செய்வோர் இன்றிச் செய்வினை இல்லை' என்றது மெய்கண்டதேவ நாயனர் திருவாக்கு. உள்ளதாகிய உலகம் செய்வோனையுடையது. உள்ளதற்குச் செய்வோர் இன்றிச் செய்வினை இல்லை. அதனுல் உள்ளதாகிய உலகத்திற்குச் செய்வினையாகிய முத்தொழிலும் செய்வோன் ஒருவன் இன்றி நிகழா. உலகம் அசேதனம். அதற்குப் படைப்பு முதலிய முத்தொழில்களும் தாமே நடவா. அம் முத்தொழில்களையும் செய்யும் ஒருவன் வேண்டும்.

'செயல் செய்வான் ஒருவன் வேண்டும்
செயற்படும் அசேதனத்தால்'

'நிலம்புனல் அனல்கால் காண நிறுத்திடும் அழிக்கும் ஆக்கும்
பலர்தரும் ஒருவன் இங்குப் பண்ணிட வேண்டா என்னின்
இலங்கிய தோற்றம் நிற்றல் ஈறிவை இசைத லாலே
நலங்கிளர் தோற்றம் நாசம் தனக்கிலா நாதன் வேண்டும்!'

மட்குடம் காரியம், மண் காரணம். மண் தானே குடமாகாது. குடம் தானே மண்ணினின்று அமையாது. காரணமான மண்ணைக்கொண்டு காரியமான குடத்தை அமைக்க ஒருவன் வேண்டும். காரணம் பஞ்சு. காரியம் நூல். பஞ்சினை நூலாக்க ஒருவன் ஒருத்தி வேண்டும். பழங்காலத்தில் ஒருத்தி. இக்காலத்தில் இருபாலாரும் நூல் நூற்பர்.

'உள்ள காரணத்தில் உண்டாம் காரியம் உதிக்கும் மண்ணில்
இல்லதாம் படம் கடாதி எழில்தரும் இயற்று வானல்'

' காரிய காரணங்கள் முதல்துணை நிமித்தம் கண்டாம்
பாரின் மண், திரிகை, பண்ணுமவன் முதல், துணை, நிமித்தம்
தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி ஆக
ஆரியன் குலால ணய்நின் றாக்குவன் அகிலம் எல்லாம்.'

'செய்வான்' என்று ஒருமையிற் குறிக்கப்பட்டவன் கடவுளும் ஆவன்; ஜீவனுமாவன். நல்வினை தீவினையென்னும் இருவினையைச் செய்வான் ஜீவன். படைப்பு முதலிய ஐவினையைச் (ஐந்தொழில்) செய்வான் கடவுள். இவ்வாறு 'செய்வான்' என்றது இருதிறத்தினும் சேரும். ஆயினும், 'சேர்ப்பான்' என்று கடவுளைத் தனியாக வேறு கூறுவதால், இங்குச் 'செய்வான்' என்றதற்கு ஜீவனையே பொருளாகக் கொள்ளல்வேண்டும்.

2. செய்வினை : வினை உயிரால் செய்யப்படுவதும் கடவுளால் செய்யப்படுவதும் என்று இருதிறப்படும். 'இருள்சேர் இருவினையும்' உயிரை முதலாக உடையன. ஐவினையும் (முத்தொழிலும் ஐந்தொழிலுமாகச் சொல்லப்படுவன) கடவுளை முதலாக உடையன. அதனால், 'செய்வினை'யின் திறம் இரண்டாதல் புலப்படும். படவே, 'செய்வானும்' இருதிறம் உற்றமை முற்கூறப்பட்டது உண்மையாதல் காண்க. (மாபாடியம் சமாசப் பதிப்பு பக்கம் 149-153 - வினையுண்மை.)

இன்பமும் துன்பமும் உயிர்க்குண்டாகின்றன. அவை காரியம். அக்காரியத்திற்குக் காரணம் உண்டு. அக்காரணமே வினை. முதல்வன் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பினும், உயிர்கள்செய்யும் இருவினையின் பயனை இன்பத் துன்பங்கள் உயிரைமட்டும் சாரும். இறைவனைச் சாரா. 'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு' என்றவாறு, இறைவனது புகழ் சொன்னாரிடத்தும் சாராத அவை இறைவனைச் சாராமை குறித்துக் கேட்பானேன் ? ஐந்தொழில் (செய்யும் இறை) முதல், இருவினை (செய்யும் உயிர்) முதலுட் சிலரை வாழ்வித்தும் சிலரைத் தாழ்வித்தும் சிலரைத் துறக்கத் துய்த்தும் சிலரை நரகத்துய்த்தும் சிலரை உயர்ந்த இனத்திற் பிறப்பித்தும் சிலரை இழிந்த இனத்திற் பிறப்பித்தும் சிலருக்கு ஆயுளை நீட்டிப்பித்தும் சிலர்க்குக் குறைப்

பித்தும் நடத்துவது ஏன்? இவ்வாறு ஐந்தொழில் செய்வான் எல்லாவுயிர்களையும் ஒப்ப நோக்காமைக்கு, உயிர்கள் செய்யும் வினையே ஏதுவாம். 'முதல்வன் செய்திக்கு வினையும் துணைக்காரணமேயாம். அஃதில்லையாயின், எல்லாவுயிர்களையும் ஒப்பநோக்குதலும் பெருங்கருணையும் உடைய முதல்வன் இன்பத் துன்பம் முதலியவற்றைக் கூட்டுதல் பொருந்தாதாய் முடியும்.!

'அவ்வவர் குணங் குற்றம் கண்டு அவ்வவற்றிற்கேற்ப அருளும் தண்டமும் செய்யும் வேந்தனுக்கு அதுபற்றிச் சுதந்திரமுடைமைக்கு இழுக்கில்லாதவாறும், வேட்டுவனதலை விரும்பும் புழுவிற்கு அவ்வேண்டும் உருவினைக் கொடுத்தல்பற்றி வேட்டுவனுக்கு அத்தொழிற்கணுளதாகிய சுதந்திரம் உடைமைக்கு இழுக்கில்லாதவாறும் போல, வினைவழி நடாத்துதல்பற்றி முதல்வன் சுதந்திரத்திற்குச் சிறிதும் இழுக்கின்மை உணர்க.

'குயவன் வனைதற்குத் தன்னுடைமையாகிய திகிரி முதலிய துணைக் காரணங்களை வேண்டினும், பிறர் ஏவல் வழி நின்று வனையவேண்டாமைபற்றிச் சுதந்திரம் உடையவன் எனப்படும். ஈண்டும் அவ்வாறே கொள்க!'

'காரியங்கள் எல்லாம் ஒருங்கே தோன்றாது அடைவே தோன்றுதற்குக் காரணம் வினையே அன்றிப் பிறிதின்மையானும் வினையுண்மை துணியப்படும்.'

வினை ஈட்டப்படுங்கால் மந்திரம் முதலிய ஆறு அத்துவாக்களிடமாக முறையே மனம் வாக்குக் காயம் எனும் மூன்றான் ஈட்டப்பட்டுத் தூல கன்மமாய் ஆகாமியம் எனப்படும்.

பின்னர்ப் பக்குவமாங்காறும் சூக்கும கன்மமாய்ப் புத்தி தத்துவத்திடமாக மாயையிற் கிடந்து, சாதி, ஆயு, போகம் எனும் மூன்றற்கும் ஏதுவாகிய முறையே, சனகம், தாரகம், போக்கியம் என மூவகைத்தாய் அபூர்வம், சஞ்சிதம், புண்ணிய பாவம் எனப் பரியாயப் பெயர் பெறும்.

அது பின்னர்ப் பயன்படுங்கால், ஆதி தைவிகம், ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தாற் பல திறப்படும். பட்டுப் பிராரத்தம் எனப்படும்.

**3. வினைப்பயன் :** இருவினைக்குத் தக்கபயன் இன்பத் துன்பங்கள். மூவகை மாயையுள்ளும் வினையுண்டு. அது மூவகையாய்ச் சுத்தம் அசுத்தம் சுத்தாசுத்தம் எனப் படும். அவற்றின் பயனும் அத்திறத்தாற் பேதம் உறும். சுத்த மாயையிற் சுத்த கன்மம் சுத்தமான பலனைத்தரும். உயிர்முதல் செய்யும் இருவினைக்குப் பயனான இன்பத் துன்பமும் இறைமுதல் செய்யும் மூவினைக்குப் பயனான அறிவு வளர்ச்சியாம் பக்குவமும் அவ்வவ் வினைப்பயனாகும். அவ்வவ்வுயிர்க்குத் தாம் செய்த வினையின் பயன் அவ்விறைவன் அருளால் எய்தும். அசுத்தம், மிச்சிரம், சுத்தம் என்னும் வேறுபாடுபற்றி, 1. உலகமும், 2. வைதிகமும், 3. அத்தியான்மிகமும், 4. அதிமார்க்கமும், 5. மாந்திரமும் என வினைகள் ஐவகைப்படும். அவை முறையே ஒன்றற்கு ஒன்று எற்றமாய் நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளின் அடங்கி, அசுத்தம், மிச்சிரம், சுத்தமாகிய போகங்களைப் பயப்பிக்கும்.

**4. சேர்ப்பான் :** தடை:—புண்ணிய பாவம் என்னும் இருகூற்றுச் சஞ்சிதவினையே தன்பயனாகிய இன்பத்துன்பங்களையும் அவை நுகர்தற்குரிய நிலைக்களமாகிய உடம்பினையும் தோற்றுவிக்கும்; அவ்வின்பத் துன்ப நுகர்ச்சி சடத்துக்குக் கூடாது; சித்தாகிய உயிரே அவ்வுடம்பிற் பொருந்தி அவற்றை அநுபவிக்கும். முன்வினையை ஈண்டு அநுபவித்து ஒழிந்தால் மேலைக்கு வினை உண்டாகும்வகை யாங்ஙனம் ?

விடை :—முன்செய்தவினை அநுபவித்தற்கு ஏதுவான முறைமையிலே மேலைக்கு வினை உளதாம்.

தடை :—அற்றேல், அவ்வினையே பயனாகவரும் என அமையும். முதல்வன் எற்றுக்கு ?

விடை :—உழவர் செய்யுந் தொழிற்குத் தக்க பயனை விளைநிலம் விளைவிப்பது அன்றி அத்தொழில் தானே விளைவிக்க மாட்டாது. அதுபோல, உணவும் வித்துமாய்த் தொன்றுதொட்டுவரும் அவ்வினைகளை வள்ளலாகிய முதல்வனே அவ்வுயிர்கட்குக் கூட்டுவன் (சேர்ப்பன்). அவ்வாறு அன்றி வினை தானே உயிர்கட்குப் பயனாய்வந்து பொருந்த மாட்டாது.

காந்தமும் பசாசமும் தனித்தனி இருப்பின், பசாசத்தை (-இரும்பினை)க் காந்தம் வலித்துக்கொள்ளாது. ஒருவன் எடுத்து நேரொக்கப் பிடித்தவழியே காந்தம் இரும்பினை வலித்துக்கொள்ளும். அவ்வினைப் பயன்களைப் பிறழாமல் நுகர்விப்பவன் முதல்வன். ஆன்மாக்கள் அவ்வினைகளைச் செய்வன. அவற்றைச் செய்தற்கு நிலைக்களம் உடம்பு. அவ்வுடம்பின்கண் பொருந்தி அவற்றது பயனை அநுபவிப்பன. முதல்வன் வினைப்பயன்களைப் பிறழாமல் நுகர்விக்கச் சேர்த்திலனேல், உயிர்கள் அவற்றது பயனை அநுபவிக்கமாட்டா. அதனால், 'சேர்ப்பான்' முதல்வன். சேர்க்கப்பெறுவன உயிர்கள். சேர்க்கப்படுவன வினைப் பயன்கள் என்னுந்திறம் உணரப்படும்.

இச் சைவநெறி யியல்பைச் சேக்கிழார் பெருமான், சாக்கிய நாயனார் புராணத்தில் மிக்க தெளிவுற விளக்கியருளிய திறம் யாவரும் உணரற்பாலது. அதனையே உமாபதி தேவ நாயனாரும் திருவருட்பயனில் ஒரு திருக்குறளில் அடக்கி யுணர்த்தியருளினர். இரண்டனையும் ஒரு சேர நோக்கி யுணர்தல் சைவர்க்கு நல்ல ஞானத்தெளிவை ஆக்கும்.

செய்வினையும் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென
வுய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே யுணர்ந்தறிந்தார்.

—சாக்கிய நாயனர் புராணம் 5

செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்
உய்வான் உளன்என் றுணர். (53)

1. புண்ணிய பாவங்களைப் பண்ணும் புருடன்
2. அப்புருடனாற் செய்யப்படும் வினைகள்
3. அவ்வினைகளின் பயனான இன்பத் துன்பங்கள்
4. அவற்றைக் கூட்டி ஊட்டும் இறைவன்

இந்நான்கு திறத்தினை உடையனாக உன்னை அறிக. நீ கதிசேர்தற்பொருட்டு.

——

தவத்திரு யோக

# அபிராமி அம்மையார் வரலாறு

(திரு. G. கலியாணம் பிள்ளை, M.A.)

**தோற்றம் :** பொன்னிமாநதியின் புனல்பரந்து வளங் கொழிக்கும் புண்ணியம்பெற்றது புனிதமான சோழவள நாடு. அந்நாட்டின்கண் காவிரியாற்றின் தென்கரையில் மாயூரம் என்று வழங்கும் பாடல்பெற்ற பதியான திருமயிலாடுதுறை அமைந்துள்ளது. அவ்வூரில் அறம் வளர்த்த நாயகி சமேத ஐயாறப்பர் எழுந்தருளியுள்ள கோயிலின் தெற்குத் தெருவில் சைவ வேளாளர் குடியில் முத்துச் சாமிப் பிள்ளை என்பவர் ஒருவர் இருந்தார். அவருடைய வாழ்க்கைத் துணைவியார் முத்தாச்சியம்மையார். இவ்விருவரின் பல மக்களில் ஒருவராக கீலக ஆண்டு, சித்திரைத் திங்கள், 19-ஆம் நாள் (29-4-1848) பூரட்டாதி நட்சத்திரத்தில் அபிராமி அம்மையார் தோன்றினர். இப்பெண் மகவின் சாதகத்தைக் கணித்த சோதிடர் அது பிற்காலத்தில் ஒரு ஞானியாய்த் திகழும் என்று கூறவே, பெருமகிழ்ச்சி யடைந்த முத்துச்சாமிப் பிள்ளை அத்தெருவிலேயே அந்தக் குழந்தை பிறந்த நினைவுச் சின்னமாக ஒரு விநாயகர் கோயிலைக் கட்டினர். இளமையிலேயே அபிராமியம்மையிடம் தெய்வ சிந்தனை மிக்கு விளங்கியது.

**திருமணமும் இல்லறமும் :** அபிராமியம்மையின் தமக்கையார் ஓர் ஆண் மகவை ஈன்ற பின் எட்டாம் நாள் இறந்தனர். மரணத் தருவாயில் தன் சகோதரியார் குழந்தையைக் காப்பாற்றவேண்டுமென்று கேட்டுக் கொண்ட தற்கிணங்கவும், தன் தாய் தந்தையரின் வற்புறுத்தலின் பலனாகவும் அபிராமி அம்மையார், தமக்கையின் கணவரான சொக்கலிங்கம் பிள்ளையை மணம் செய்துகொள்ள இசையவும், வதுவையும் நடந்தது. சொக்கலிங்கம் பிள்ளை கும்பகோணத்தில் நீதி மன்றத்தில் அலுவல் பார்த்து வந்தார். அபிராமி அம்மையாரும் அவருடன் இல்லறம் என்னும் நல்லறம் நடாத்தி வந்தனர். சுபேதாராக இருந்து ஓய்வுபெற்ற சுப்பையா சுவாமிகள் என்பார் சொக்க-

லிங்கம் பிள்ளையின் ஆன்ம நண்பர். அடிக்கடி இருவரும் தத்துவ விசாரணையில் ஈடுபடுவதுண்டு. அது அபிராமி யம்மையாருக்கு மணி மந்திர ஔடதாதிகளைப்பற்றிய பல செய்திகளை யறிந்து கொள்வதற்கு நல்ல வாய்ப்பாக இருந்தது.

துறவறம்; அபிராமி அம்மைக்குச் சுமார் இருபது வயதாக இருக்கும்போது அவர் கணவர் காலஞ் சென்றார். அதனல் கும்பகோணத்தை விட்டு மாயூரத்திற்குத் தாய் தந்தையர் வீட்டிற்கு வந்து சேர்ந்தனர். பெற்றோர் வீட்டில் ஒரு அறையில் அபிராமியம்மனின் விக்கிரகம் ஒன்றை வைத்து வழிபட்டுக்கொண்டு பன்னிரண்டு ஆண்டுகள் அம்மையார் அவ்வறையை விட்டு வெளி வராமல் கடுந்தவம் இருந்தார். பின்னர் அதே தெருவில் தனது தந்தையார் கட்டிவைத்த விநாயகர் கோயிலில் சில ஆண்டுகள் தங்கியிருந்தனர். முத்துசாமிப் பிள்ளை தன் திருமகளாரின் விருப்பத்திற்கிணங்கக் கச்சேரி வீதியில் ஒரு அகன்ற தோட்டத்தில் திருமடங் கட்டி அங்கே அபிராமி யம்மையார் இருக்க வசதிகள் செய்து கொடுத்தார். சாம்ப சிவம், வைத்தியநாதன் என்ற இரு அந்தணச் சிறுவர்கள் சீடர்களாக வந்து தொண்டு செய்தனர். சாம்பசிவக் குருக்கள் அம்மையாரிடமிருந்து வைத்திய முறையைத் தெரிந்துகொண்டார். வைத்தியநாதய்யர் விஷக்கடி நீக்கும் மந்திரங்களைக் கற்றுக்கொண்டார். இவ்விருவரும் தங்கள் வாழ்நாள் முழுவதையும் அம்மையாருடனேயே இருந்து கழித்தனர். அவர்களிடம் நோய்க்கும், பாம்பு முதலிய விஷக் கடிகளுக்கும் சிகிச்சை பெற்றுக் குணமடைந் தவர்கள் பல்லாயிரக்கணக்கினர்.

நகர உயர்நிலைப்பள்ளி விளையாட்டு மைதானத்திற்காக அம்மையாருடைய மடத்தையும், தோட்டத்தையும் நிலக் கைப்பற்றுதல் சட்டத்தின்படி அரசாங்கத்தார் எடுத்துக் கொண்டனர். அரசாங்கம் கொடுத்த ஈட்டுத் தொகையை யும், வைத்தியம் மந்திரம் முதலியவைகளால் சிகிச்சைகள் பெற்ற அன்பர் கொடுத்த உதவித் தொகைகளையும்கொண்டு கச்சேரி வீதியிலேயே மடம் இருந்த இடத்திற்கு மேல்புறம் பழங்காவிரிக்கு வடகரையில் ஒரு தோட்டத்தை விலைக்கு வாங்கி அதில் தங்களுக்கு ஒரு மடமும், கட்டு மலைக்கோயி

லான தண்டபாணி சுவாமி கோயிலும், திருக்குளமும் அமைத்து அங்கே அம்மையாரும் அவர்களுடைய இரு அந்தணத் தொண்டர்களும் இருந்து வருவாராயினர்.

அன்றாட வாழ்க்கை: அதிகாலையில் எழுந்தவுடன் அம்மையார் சாயாதேவி தரிசனத்துடன் சூரிய வணக்கம் செய்வார்கள். பிறகு கருட தரிசனம் தவறாமல் செய்வார்கள். அப்படிச் செய்யாமல் உமிழ் நீரையும் விழுங்குவதில்லை. 1933-ஆம் ஆண்டில் புயல்காற்று மழை அடித்தபோது மூன்று நாட்கள் கருட தரிசனம் கிடைக்காமலிருந்து நான்காம் நாள் கருடனைப் பார்த்த பின்பே உணவுண்டார்கள். நடக்கமுடியாத காலத்திலும் தள்ளு நாற்காலியில் சென்று கருடதரிசனம் செய்து வந்தார்கள். பகலில் ஒரு வேளை உணவும், இரவில் பால் மாத்திரமும் சாப்பிடுவது வழக்கம். அவர்களுடைய வாழ்நாள் முழுமையும் இந்த நியதிகளைக் கைக்கொண்டிருந்தார்கள்.

அற்புதச் செயல்கள்: தந்தையார் கட்டிக்கொடுத்த மடத்திலிருக்கும்போது ஒருநாள் நல்ல பாம்பு அம்மையாரைத் தீண்டியதால் இரத்தம் பெருகியோடிற்று. பெற்றோர், உற்றார், உறவினர் எல்லோரும் அழுது அரற்றினர். அம்மையார் அமைதியாக இருந்துகொண்டு தனக்கு ஒன்றும் நேராது என்று சொன்னார்கள். தானே பாம்பு கடிக்கு மந்திரித்துக் கொண்டார்கள். மறுநாள் அவர்களுடைய படுக்கை அறையில் அதே பாம்பு வந்து மயங்கிக்கிடந்து உயிர்விட்டது. இந்த அற்புதம் நிகழ்ந்த பின் அவர்களுடைய புகழ் எங்கும் பரவியது. வடலூர் அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளாரும் அம்மையாரை வந்து பார்த்து அளவளாவிச் சென்றனர். அம்மையாரும் அடிகளாரைப் போய்ப் பார்த்து வந்தார்கள்.

நீதிபதிகள், கலெக்டர், எஞ்சினியர்கள், மிராசுதார்கள், காட்டுக்கோட்டை நகரத்தார்கள் முதலியவர்கள் இவர்களிடம் பக்தி செலுத்தி வந்தார்கள். தங்களுக்கு இன்னல்கள் நேர்ந்தபோது அம்மையாரிடம் வந்து திருநீறு பெற்றுச் சென்று துன்பம் நீக்கிக்கொள்வார்கள். கடைசி வரையில் அம்மையாருக்குக் கண் நன்றாய்த் தெரிந்து கொண்டு இருந்ததால் பலருக்குக் கைரேகை பார்ப்ப

துண்டு. தமது குருவாகிய ஸ்ரீ சுப்பையா சுவாமிகளின் பெருங் கருணையாலும், அவர்களின் வழிபடு கடவுளான தண்டபாணி சுவாமியின் திருவருளாலும் அவர்களின் உத்தரவை இரவில்பெற்ற பின்பே மறுநாள் பலன் சொல்வார்கள். சங்காதோஷம், பேய் பிசாசுகள், மலடு, மேக குன்மரோகங்கள் இவைகளால் பீடிக்கப் பெற்றவர்களுக்கு இவர்கள் மருந்துகள் கொடுத்தும், தாயத்துகள் மந்திரித்துக் கொடுத்தும் நலனடையச் செய்து வந்தார்கள். தங்களுடைய சீடர்களுடன் சென்று பல தலங்களையும் வழிபட்டு வந்தார்கள்.

முத்திப்பேறு: அம்மையார், தண்டபாணி சுவாமி மலைக்கோயிலைக் கட்டும்போதே அதன் அடியில் ஒரு சுரங்க அறை அமைக்கச் செய்தார்கள். அதில் மூல ஸ்தானத்திற்கு நேர் கீழே தன்னைச் சமாதி செய்ய வேண்டிய ஏற்பாடுகளைத் தம் வாழ்நாளிலேயே செய்து கொண்டார்கள். மாவட்ட மாஜிஸ்திரேட்டு, நகர சுகாதார அதிகாரிகள் முதலியவர்களிடம் சுரங்க அறையில் சமாதி செய்வதற்கான உத்தரவுகளை 1914-ஆம் ஆண்டிலேயே பெற்று வைத்திருந்தார்கள். தாரண ஆண்டு, புரட்டாசித் திங்கள், 31-ஆம் நாள் (16-10-1944) திங்கட்கிழமை அஸ்த நட்சத்திரத்தில் குருநாதா! சுப்பையா! தண்டபாணி! என்ற திருநாமங்களை உச்சரித்துக்கொண்டே இறைவன் திருவடி நீழலை எய்தினார்கள். அப்போது அவர்களுக்கு வயது 97 (தொண்ணூற்றேழு).

சமாதி ஆவதற்கு ஒன்பது நாட்கள் முன்பே தமது பேரராகிய G. அண்ணாமலைப் பிள்ளையை அழைத்து, "அப்பன் இன்னும் ஒன்பது நாட்களில் என்னை அழைத்துக் கொள்ள ஸ்ரீ சுப்பையா, ஸ்ரீ தண்டபாணி உத்தரவு பிறந்திருக்கிறது. அதற்கு முன்னால் ஆகவேண்டியவைகளைச் செய்" என்று கூறிவிட்டார்கள். அவர்கள் திருவுளப்படியே எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. காசியிலிருந்து வந்த துறவியொருவர் ஒரு உருத்திராட்ச மாலையை அம்மையாரிடம் கொடுத்துச் சமாதியாகும்போது சிரசில் தரித்துக்கொள்ளச் சொல்லிச் சென்றார். அதை அம்மையார், G. அண்ணாமலைப் பிள்ளையிடம் கொடுத்து அவ்விதம் செய்யச் சொன்னார்கள். அப்படியே செய்யப்பட்டது.

**கோயில் மடம் நிர்வாகம் :** அம்மையார் தமக்குப் பிற்காலம் கோயில், மடம் முதலியவற்றின் நிர்வாகத்தை நடத்தத் தமது பேரராகிய G. அண்ணாமலைப் பிள்ளையை நியமித்து ஒரு உயில் பத்திரம் எழுதி, அதை சப் ரிஜிஸ்திரார் முன்பு அவர்களே கையெழுத்திட்டு அப்பத்திரத்தைப் பதிவு செய்தார்கள். அவர்களுடைய திருவுளப் பாங்கின் வண்ணமே தண்டபாணி சுவாமி கோயில் பூசை, மடம் முதலியவற்றின் நிர்வாகங்கள் நடைபெற்று வருகின்றன. அம்மையாரின் 16-வது ஆண்டு குருபூசைத் திருநாளான இன்று (19-10-1960) அவர்களுடைய இந்த வரலாற்றுச் சுருக்கம் வெளியிடப்பெறுகிறது.

அவர்களுடைய மடம் முன்பிருந்த இடம் இப்போது நகரப் பூங்காவாகவும், மடம் கட்டிடம் இருந்த அதே இடத்தில் நகராட்சி நூல் நிலையமும் இருக்கின்றன. கண் காட்சிகளும், மாபெரும் பொதுக் கூட்டங்களும் அந்த இடத்தில் நடைபெறுகின்றனவென்றால் பெரியோர்கள் வாழ்ந்த அந்தப் புனிதமான இடத்திற்கு வேறென்ன பெருமைவேண்டும் ?

(19-10-60) அன்று நண்பகல் தண்டபாணி சுவாமி கோயில், சமாதி இவ்விடங்களில் வழிபாடும், அடியார்க் கமுதளித்தலும் நடைபெற்றன. மாலையில் கும்பகோணம் ரெவினியூ கோர்ட் ஸ்பெஷல் டெபுடி கலெக்டர் திரு. N. குருசாமிப் பிள்ளையவர்கள் தலைமையில் சமயப்பேரவை கூடிற்று. ஸ்ரீ அபிராமி யம்மையாரின் பேரரான திரு. G. அண்ணாமலைப் பிள்ளையவர்கள் எல்லோரையும் வரவேற்றார்கள். தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர்களான திருவாளர்கள் வி. சா. குருசாமி தேசிகர், சொ. சிங்காரவேலனார் B.A., ம. சிவசம்பு இவர்கள் முறையே "காரைக்காலம்மையார்", "திலகவதியார்", "மங்கையர்க்கரசியார்" என்னும் பொருள்கள்பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். ஸ்ரீ அம்மையாரின் மற்றொரு பேரரும், அரசாங்க அறநிலையத் துறை வெளியீடான "திருக்கோயில்" இதழின் ஆசிரியருமான திரு. G. கலியாணம் M.A. அனைவருக்கும் நன்றி கூறினார். கடவுள் வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

---

# திருநெறி விளக்கம்*

(மலர் - 33 ; இதழ் - 10 ; 320-ம் பக்கத் தொடர்ச்சி)

சாற்றியவிக் கன்மவழி குலமாயுப் போகத்
தன்மையதா மிம்மூன்றுந் தொன்மையதா முயிர்க்குத்
தேற்றமுற முற்செய்வினை யன்றியுரு ததுவும்
செய்தவடை விற்செறியா சேருமுறை மாறித்
தோற்றருதெய் விகத்தினொடு பவுதிகமான் மிகமாஞ்
சுட்டறுமொன் றவைதாமுஞ் சுட்டுசட சித்தில்
ஆற்றலுறும் அசேதனம்போற் சேதனமு மாகில்
அகலும்வினை யன்றாகில் அறாதுவினை யுனக்கே. (34)

எய்தியிடு மறுமையினுக் கேதுவினை யென்னில்
எதுவினி லிதமகித மென்றுகொணீ யதுவும்
செய்திபெற வருளதுமுற் றிகழிலறு நீமுற்
றிகழில்வினை பெருகியிடு மெனவுரைப்பர் தெளிந்தோர்
மெய்தகமற் றிருவகையாம் வினைகளது நினைவின்
மேவாத வினைமேவும் வினையாக விளைந்திட்
டுய்தவிலா விதமகித மாகியிடு மிவற்றால்
ஒற்கமற விருவினைதா னுற்பவிக்கு முனக்கே. (35)

வாக்குமனங் காயமெனும் மூவகையான் வினைகள்
வருமொன்றி லொன்றொழியா மாறாது நுகர்ச்சி
போக்கலுறு பாவமிகு புண்ணியத்தா லென்று
புகன்றிடும்வே தாகமநூல் புகன்றமுறை யிற்றில்
மீக்கொளவின் மிகுதிகெடும் விடத்தடைபோ லந்த
மெய்யிலுரு தழிவின்றி மேலைக்கு வித்தாய்
ஆக்கலுறு மரும்பொருளாற் கோடலுமா மென்றே
யறைந்திடுவர் சிவஞான நிறைந்து ளோரே. (36)

---

*தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலைய ஏட்டுப் பிரதிகளினின்று எடுத்து வெளியிடப்பெறுவது—தீ. கி. நா.

வஞ்சமறு மாருயிர்கட் கிரண்டறவே நின்று
 மயக்கியிடு மாணவம் அம்மயக்கி னுக்குத்
தஞ்சமிக வாகுதிரோ தாயி மானய
 தாவிலிரு வகைகருமந் தனுவாதி செலுத்தும்
எஞ்சலிலா மாமாயை யென்னுமிவை தன்னை
 யிழித்தலரி தாமென்று மிவையருளா மென்றும்
பஞ்சமல மென்றுமர னருளா னேக்கிப்
 பகர்ந்திடுவர் பாசமெலா மகன்று ளோரே. (37)

தொகுதிமிகு முயிரதுகே வலசகல சுத்தஞ்
 சொல்லியிடும் வகையவத்தை புல்லியிடும் மூலப்
பகுதிமுதல் பாரளவும் சார்வகன்று கலாதி
 பற்ருது மாமாயை படராது குணங்கள்
தகுகுறிகள் வடிவகன்று தனதுண்மை யிழந்து
 தம்விழிபோன் றதுவாகித் தனிமலமாய் மோக
மிகுதியினில் வியாபகமாய் ஒழிவறவந் நிலையில்
 மேலிருள்கே வலமென்று விளம்பு நூலே. (38)

காணுத வாணவநீர் கட்டுரைக்க வேண்டா
 கண்டதுநான் மாயை கன்மமென்னு மிரண்டே
யானுன வாறுயிர்முன் செய்வினைகட் கீடா
 வவ்வுயிர்க்கு மெய்யாதி யளித்திடுவ னவற்ருல்
நாணுது வினைகள்புரிந் தருந்திவினை யொப்பின்
 நண்ணியிடு மலமகல நல்லருளா லவையின்
பூணுது முன்புதனக் குள்ளவிம லதையைப்
 பொருந்தியிடு மென்றவுரை பொருந்தாது நமக்கே.

ஆர்ந்தவினை யாதியென வறைதன்முன்மா யையென
 ஐயமிக வின்றளவு மறுதிபெரு துனக்குப்
பேர்ந்தவுரை போற்றில்விதை போலுமலம் விமலம்
 போதாமைப் பொருந்தாது பொருந்தியதென் முத்தி
சேர்ந்திடினும் நிலையிலைநீ செப்பியது நிற்கச்
 சேர்கருவி கலாதிசிவ தத்துவமொன் றற்ருற்
சார்ந்தவுணர் வின்மையவன் அறியாமை யென்றல்
 தானேகாண் வையத்தின் றன்மை தானே. (40)

மெய்யுணர்வைப் பாழ்படுத்திப் பொய்யுணர்வை மெய்யாய்
விளைவித்து நின்றிடுத லானும்மை யருள்வந்
துய்நெறியெய் திலவனியாவையுமா யெங்கும்
ஒழிவறவே நின்றநிலை யுற்றுணர்த லானும்உயர்
மையலுறு மலத்தின்மலஞ் சிவத்தினுமச் சிவமே
மாருது மூலமல மாறிவருமா யைவினை
ஐயனருள் பெறிலந்த வாணவத்தி னுண்மை
அறியஎளிது அரிதுஉனது போதமதற் ககன்றே. (41)

ஓதுமிருண் மூலமல மொழிப்பதற்கு மாயா
உபாதிசெறிந்திடு மருளா லிருளிலொளி யொப்பப்
போதமெழும் போகநுகர் பொருட்டாக முன்னர்ப்
புகன்றமல முயிர்ப்பொருளைப் பொருந்தாமன் மறைக்கும்
பேதமுறு மிவையிருளும் வெளியுமெனும் பெற்றி
பெறுமிறைவன் மலத்திலறி வித்தலது கலையின்
மீதிலுவர் சாணிமலி வித்ததற்கு வெண்மை
விரவுவித்த லதுபோலுமென விதித்துரைப்பர் மதித்தே.

நாடரிய வுணர்வாகி யொளியாய் விந்து
நண்ணியுள மகலாத நாத மாகி
நீடுமது சூக்குமை பைசந்தி வருணங்கள்
நிகழுநெறி யுள்ளொடுக்கி மயிலண்ட நீர்போற்
கூடியிடு முணர்வாகிச் சிந்தைசெயு முயிர்கட் [தான்
குய்க்குமுருத் தெரித்துணர்வாய்க் குறும்நன்மத் திமை.
கேடதற வுதானனெடு கெழுமியசொற் பொருள்சேர்
கேள்வியுமாய்ப் பிறர்செவிக்குக் கேட்பது வைகரியே.

ஈங்கிவைமற் றுயிர்போகம் நுகர்வதற்குத் தக்க
வெய்தியிடும் வித்தாதியை வாதமா லென்பர்
ஓங்குமலஞ் சிறிதொதுக்கித் தொழில்வினைக்கு மாயை
யுற்றகலை வித்தைவிடை யங்களிலே யுயிருக்
காங்கறிவு விளங்கும்வகை யெழுப்பியிடு மராகம்
ஆசையினை யளவுபடா தடைந்தாலு மடையாப்
பாங்குபெற வமையாத பண்பளிக்கு மிதனாற்
பயின்றிடுமூ வகையுருவு பரனருளா லுயிர்க்கே. (44)

நீணில மீதினிலரச னாணையெனக் கன்மம்
நிச்சயித்துத் தனதளவி னிறுத்துவிக்கும் நியதி
காணலருங் கழிகாலம் நிகழ்காலம் மெதிருங்
காலமெனு மிவையெல்லாம் பலபுதுமை காட்டும்
பூணுமறு பொறிகடொறு மிறைபிலொரு நிலையே
போல்வருதல் புருடனெனப் புகன்றிடுவ ரிதற்குப்
பேணலரும் பஞ்சகலா சொற்போ லன்றிப்
பிறிவிலதென் றாகமநூல் பேசுந் தானே. (45)

முக்குணத்தின் சேர்வாய பகுதிதிரி குணமாம்
மொழியிலவை சாத்துவித ராசத தாமதமா
மக்குணங்க ளோரொன்றில் இரண்டிரண்டு குணங்கள்
ஆகியவை யொன்பானு மாருயிர்ப் பாலணைந்திட்
டொக்கவரு புலன்களிடத் துறுபயன்க ளெல்லாம்
உற்றிடுதற் கிடமாகி யுணர்விலொளி யாகும்
தொக்கவிட யங்கடொறு மொருமைபல விதமாய்த்
துணிவுசரு மதபுந்தி யெனவுரைப்பர் துணிந்தோர்.(46)

இல்லாத தனைப்பண்ணி யானெனதிங் கெழுப்பி
யெனையொப்பார் புவியின்கண் யாருமிலை யென்றே
பொல்லாத வாங்காரம் புணர்ந்துயிரி னிற்கும்
புலன்கடொறு மிந்திரியம் பொருந்துமுன முந்திச்
செல்லாநின் றிடுமிச்சை வடிவாகி யென்றும்
செலவாகிப் பாவியினிற் செறியுமனஞ் சிந்தை
நில்லாத பொருளின்சுட் டுணர்வாகி யையம்
நீடியிடு மென்றுமிக நிகழ்த்து நூலே. (47)

சாற்றுசெவி துவக்குவழி நாக்கு மூக்கு
தன்னிலடை விடையவடை வுன்னியிடி லவைதாம்
மாற்றருஞ் சத்தப்பரிச ரூபரத கந்தம்
மன்னியிடு முறைமுறையே வாக்குப் பாதம்
பாற்றரிய பாணிதரு பாயுவினொ டுபத்தம்
பன்னியிடு மஞ்சுக்கும் பகர்வசன கமனம்
ஊற்றமிகு தானவிசர்க் கானந்த மைந்தும்
உறுதொழிலென் றறுதிபெற வுணர்த்தும் நூலே. (48)

மேதகுமைம் பூதவயி னைம்பொறிக ணின்று
விடயங்கண் மேவுநெறி விண்ணதனிற் செவியின்
வாதமுறுந் துவக்கெரியில் விழிபுனலி னும்மண்
மருவியிடு காசினியில் வருபுலன்கொள் வகையாற்
போதமுறப் பொருந்தியிடும் வழுவாமன் முன்னர்ப்
பூதங்க ளைந்துமுறப் புணர்ந்துயிரி னிற்றல்
ஓதியிடில் கடினமுத லாகவுறு மென்றிட்
டுணர்ந்திடுவ ருபாதியெலாந் தணந்து ளோரே. (49)

புறத்துகிரந் தரமாகி யிடங்கொடுக்கும் வானம்
பொற்பறுகாற் சலிப்பினையுற் றெப்பொருளுந் திரட்டும்
திறத்தின்மிகுந் தழலதுசுட் டொன்றுவித்து நிற்கும்
நீர்குளிர்ந்து நெகிழ்ச்சிதரும் நிலனூரத்துத் தரிக்கும்
திறத்தவிதன் றொகையுரைக் கிலஞ்சேழென மூன்றும்
செப்பலருஞ் சுத்தஞ்சுத் தாசுத்த மசுத்தம்
பிறத்தலகன் றவர்முப்பத் தாறெனவே விதனைப்
பேசிடுவர் மயக்கமறப் பிறித்தருளி னின்றே. (50)

பகர்ந்திடுமிக் கருவிகளில் உயிர்மயங்கின் கன்மப்
பயனருந்தி வருமுருவம் பாறிடும்போ தரவு
திகழ்ந்திடு மண்டசங்கள் பரகாயஞ் சேறல்
செற்றியதொன் றிலவ்வுடல் விட்டகலும் செயல்போல்
அகந்திகழும் கலாதிதரு மறிவுதொழி லிச்சை
ஆதியசூக் குமவடிவில் அருகிரயந் துறக்கம்
புகுந்துவினை நுகர்ந்து பரனருளான் மண்ணிற்
பொருந்தியிடு மெனமறைகள் புகலு மன்றே. (51)

யோனிவகை யெண்பத்து நான்கு நூறென்று
ஓதிலவை யண்டசநற் சுவேதசமுற் பீசம்
ஆனசரா யுசநான்கிற் ருபரம் பத்தொன்பான்
அமரர்பதி னென்றூரும் அவைபதி னைந்தாம்
வானமுறும் பறவைநீர் வாழ்வன நாற்காலி
வகைபப்பத் தாம்மனிதர் வகுப்புரைக்கி லொன்பான்
ஈனமற முன்னுரைத்த தொவ்வகை யிதெனநீ
யேற்றியுனக் கிசையவறி யிவையனைத்து மின்றே.(52)

தொல்லையவிப் பிறவிகளி லிறந்துபிறந் தளவில்
துன்பமுட னின்பங்க டுய்த்ததனற் கன்ம
வெல்லையற வீட்டியதற் கீடான வாக்கை
யெடுத்தெடுத்த வாக்கைதொறும் இரண்டறவே நின்று
ஒல்லையுறு கருவிதொறு மொருநிலைபோற் றெருமந்
துறுபயன்கள் நுகர்ந்தொழிவில் இதமகித முருவாய்ச்
செல்லுமது சகலமெனப் புகல்வரருட் கடல்வாய்ச்
சேர்ந்து சிவானந்த வமுதார்ந்து ளோரே. (53)

இருவினைகள் புரிந்தருந்தி யெண்ணில்வினை யீட்டி
யின்பமொடு துன்பமுறு மெல்லையினி லுளதாம்
பெருவினைக ளிரண்டுமொரு காலமுறு நிகைப்பிற்
பெய்தவினை யெய்தும்வினை செய்திடுவர் பிறந்திட்
டொருவியிடு நிலையதனல் வினைகள் துலையொப்ப
வொன்றுபடக் கெடுப்பதுபோ னின்ற திரோதாயி
கருணைதர வந்நிலைய யிதமகித மாக்க
காட்டிடு சத்திநிபாத நீட்டு மன்றே. (54)

கூறியசத் திநிபாதம் நான்கு மெய்திற்,
குறைவிலிறை யருட்குருவாய்க் குறுகி ஞானப்
பேறுபெறற் பொருட்டிருட்கே வலசகலம் பிறித்துப்
பிறித்தநிலை நிகழாமற் பெருகருளி னிறுத்திவ்
வாறுமெலச் செலவனித்தம் வழாவகையால் வாழ
வரவுயிர்க்கு மலம் வாட்டிடுதல் சுத்தம்
தேறும்வகை யிவையுணர்த்தற் காவதெவர்க் கென்னிற்
றிவிராருக் கென்றுமறை செப்பு மன்றே. (55)

பாவையர்கட் படும்வீடு பஞ்ச கந்தம்
பாழ்படும்வீ டிருவினைகள் பாறும் வீடு
மேவுகுணங் கெடும்வீடு விவேக வீடு
மேனிநிலை வீடுமலம் வீயும் வீடு
ஓவிலுயிர் கெடும்வீடு சித்தி வீடு
உயிர்கேடு பாடாண வீடும் வீடென்ற
யாவுமிருள் செறிவீடு சிவன்று ளெய்தி
யிரண்டறும் வீடது வீடென்றியம்பும் நூலே. (56)

(தொடரும்)

வினர் தக்க வசதிகள் எற்படுத்துவார்கள். விமான ஊர்தி நிலையம் (Air Port) திருக்கேதீச்சரத்திலிருந்து வெகுதூரத்திலிருப்பதால் மன்னார் ரயிலடிக்கு அன்பர்கள் யாவரும் வந்து மாநாட்டிற்கு வருவது நலம். வேறு விவரம் தேவைப்படின் செயலாளருக்கு எழுதித் தெரிந்து கொள்ளவும். —மா. ப. தியாகராஜன், உதவிச்செயலர்.

## செய்திச் சுருக்கங்கள்

மெய்கண்டார் விழா : 29-10-60 சனிக்கிழமை யன்று நமது சமாஜச் சார்பில் திருமயிலைக் கபாலீச்சரத்தில் அறநிலையத் துறை அலுவலர் - திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை, பி.எ., எல்.டி., அவர்கள் தலைமையில் மிகச் சிறப்புற நிகழ்ந்தது. அது போது திரு. புலவர் - முருகவேள் அவர்கள் 'சிவஞான போதம்' பற்றியும், திருவாசகமணி - கே. எம். பாலசுப்பிரமணியம், பி எ, பி.எல்., அவர்கள் 'மெய்கண்டார்' பற்றியும், திரு. பாலூர் - கண்ணப்ப முதலியார், எம்.எ.,பி.ஓ.எல்., அவர்கள் 'ஆணவமலம்' பற்றியும் சொற்பொழி வாற்றிச் சிறப்பித்தனர். இறுதியாகத் திருவாளர் இராவ்சாஹிப் - நல். முருகேச முதலியார், பி.எ., அவர்கள் நன்றி கூறக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

21-10-60 வெள்ளிக்கிழமையன்று சென்னைத் தியாகராய நகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தின் சார்பில், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் தலைமையில், சென்னையில் இருந்து அன்பர்கள் பலர் திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்று மெய்கண்டாரைச் சிறப்புற வழிபட்டு வந்தனர். அங்கு மெய்கண்டார்க்குச் சிறப்பு வழிபாடுகள் பலவும் செய்யப்பட்டன. அன்று மாலை அருட்டுறை நாதர் கோயிலில் நிகழ்ந்த சமயப் பேரவைக்கு இராவ்சாஹிப் - திரு. நல். முருகேச முதலியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். அதுபோது திருவாளர்கள் சேலம் சுப்பராயப் பிள்ளை, சென்னை நகராண்மைக் கழகத் துணை ஆணையர் திரு. ந. சங்கரன், எம்.எ.,எல்.டி., புலவர் - முருகவேள், அமுதமொழி - சாமிநாதப்பிள்ளை, துறைசை யாதீனக் கட்டளைத் தம்பிரான் சுவாமிகள் முதலியவர்கள் பலர் சொற்பொழிவாற்றினர். ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அனைவர்க்கும் வாழ்த்துரையும் நன்றியுரையும் கூறினார்கள்.

ஆண்டு விழா : திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபையின் 75-ஆம் ஆண்டு நிறைவு விழா 30-10-60 ஞாயிறன்று காலை மாலை இரு வேளைகளிலும் திருச்சி மலைக்கோவில் நூற்றுக்கால் மண்டபத்தில் மிகவும் சிறப்புற நிகழ்ந்தது. அவ்வமயம் 'அருள் மொழியரசு' திரு. முருக கிருபானந்தவாரியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். சித்தாந்தக் கலைமணி - வித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார், சைவப் பெருநாவலர் - வித்துவான் - திரு. அ. நடேச

முதலியார், முதுபெரும் புலவர் திரு. கே. ஆறுமுக நாவலர் ஆகிய அறிஞர்கள் முறையே சிவநெறிச் சிறப்பியல், திருவருட் பயன், சித்தாந்த-சைவம் என்னும் பொருள்கள் பற்றி விரிவுரை யாற்றினர். தலைவர் அவர்களின் முடிவுரைக்குப் பின் செயலாளர் நன்றியுரை நவில, விழா இனிது நிறைவுற்றது.

திருமணம்: நம் சமாஜத் துணைத்தலைவர் சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களின் பேர்த்தியும், திருமதி. மாகதவல்லி சிவபூஷணம் அவர்களின் புதல்வியும் ஆகிய செல்வி - எஸ். தயைப்பிரியை, பி.எஸ்சி.க்கும் செல்வன்-பி. சுந்தரராமி, பி.இ. அவர்களுக்கும் 30-10-60 அன்று சென்னை, பவழக்காரத் தெருவில் திருமணம் மிகவும் சிறப்புற நிகழ்ந்தது. சமாஜ அன்பர்கள் பலரும் திருமணத்திற்குச் சென்று சிறப்பித்தனர். மணமக்கள் நீடினிது வாழ்க என அம்மையப்பர் திருவருளை வழுத்துகின்றோம்.

ஆண்டு விழா: 4—11—60 வெள்ளிக்கிழமை யன்று திருப்போரூர் முருகன் செந்தமிழ்க் கழகத்தின் இரண்டாம் ஆண்டு நிறைவு விழா, தாம்பரம் 'சென்னைக் கிறித்தவக் கல்லூரி'யின் தமிழ்த்துறைத் தலைவர் - பேராசிரியர் - திரு. பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ., அவர்கள் தலைமையில் மிகச் சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. 'சௌபாக்கியம்' ஆசிரியர் வித்துவான் - திரு. பி. சி. லிங்கம் அவர்களும், வித்துவான் - திரு. முத்துக் கண்ணப்பர், பி.ஏ., எம்.எல்.சி., அவர்களும் முறையே 'வேல்' 'முருகன் பெருமை' என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழி வாற்றினர். வித்துவான் - திரு. அம்பை. சங்கரன் அவர்கள் நன்றி யுரை கூறினார்கள். கட்டளை ஸ்ரீமத் சிதம்பர சிவராம சுவாமிகள் அவர்கள் அனைவர்க்கும் ஆசியுரை வழங்கிச் சிறப்பித்தார்கள்.

பிரிவாற்றாமை: நமது சமாஜப் பேரன்பரும், திருப்பாதிரிப் புலியூரை அடுத்த வண்டிப் பாளையத்தைச் சேர்ந்த பிரமுகரும், அப்பர் கரையேறிய தெப்பக்குளத் திருப்பணிக் குழுவின் துணைத் தலைவராக இருந்து பெரிதும் ஈடுபட்டுழைத்தவரும் ஆகிய சைவத் திருவாளர் வை. சாமிநாத முதலியார் அவர்கள் 30—9—60 ஞாயிறன்று இவ்வுலக வாழ்வை நீத்தமை கேட்டுப் பெரிதும் வருந்து கின்றோம். அவர்தம் ஆருயிர் அம்பலவாணர் திருவடிக்கீழ் அமர்ந்து என்றும் இன்புறுவதாக!

Printed at the Sadhu Press, 15. Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.